11th September 1958]

SRI M. JAGANNATHAN : திண்டிவனம் தாலுகாவில், உலக்கூர் பிர்க்காவில் கீழ்க்கரணி என்ற இடத்தை சமீபத்தில் அமைச்சர் அவர்கள் கூட பார்வையிட்டார்கள். இந்த இடத்தில் இன்னும் ஹரிஜனங்களுக்கு வீடுகள் கட்டிக்கொடுக்கப்படவில்லை. அதிகமாக காலதாமதம் ஆகிறது இன்னும் பல இடங்களிலும் இம்மாதிரி வீடுகள் கட்டிக்கொடுப்பதில் காலதாமதம் ஆகிறது. காலதாமதம் ஆகாமல் கூடிய சீக்கிரம் ஏழை ஹரிஜனங்களுக்கு வீடுகள் கட்டிக்கொடுப்பதற்கு அரசாங்கம் நடவடிக்கை எடுக்குமா ?

THE HON. SRI P. KAKKAN : எந்தெந்த இடத்தில் வீடுகள் கட்டுவதற்காக கலெக்டர் சிபார்சு செய்கிறரோ, அந்த இடங்களில் வீடுகள் கட்டிக் கொடுக்க ஏற்பாடு செய்யப்படுகிறது. வெகு துரிதமாகவே வீடுகள் கட்டிக் கொடுப்பதற்கு ஏற்பாடுகள் செய்யப்படுகின்றன.

SRI A. V. P. ASAITHAMBI : இதுவரையிலும் ஹரிஜனங்களுக்கு பல இடங்களில் கட்டிக்கொடுக்கப்பட்டிருக்கும் வீடுகள் சிறிய காற்றிற்கும், மழைக்கும் கூட விழுந்துவிடக்கூடிய நிலைமையில் இருக்கிறது என்று ஏற்கனவே புகார் வந்திருக்கிறதா ? அப்படி, புகார் வந்திருக்கிறது என்று சொன்னால், அதற்காக சர்க்கார் என்ன நடவடிக்கை எடுத்துக்கொண்டிருக்கிருர்கள். இனிமேல் கட்டப்படுகின்ற வீடுகளையாவது நல்ல முறையில் கட்டுவதற்கு சர்க்கார் ஏற்பாடு செய்யுமா ?

THE HON. SRI P. KAKKAN : இம்மாதிரி புகார் ஒன்றும் வரவில்லை. அங்கத்தினர் அவர்களின் அபிப்பிராயம் தான் அப்படி இருக்கிறது என்று நான் தெரிந்துகொள்ளவேண்டியிருக்கிறது. கட்டப்படும் வீடுகளெல்லாம் நன்ருக கட்டப்படுவதற்குத்தான் ஏற்பாடுகள் செய்யப்பட்டிருக்கின்றன. ஏதோ ஒரு சில இடங்களில் ஏதாவது குறை இருந்தால், பூராவும் அம்மாதிரி விழுந்துவிடுகிறது என்று சொல்லமுடியாது என்று தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

MR. SPEAKER : கனம் ஆர். வெங்கடராமன் மேல் சபைக்கு போகவேண்டியிருப்பதால், அவர்கள் பதில் சொல்லவேண்டிய கேள்விகளை முதலில் எடுத்துக்கொள்ளுகிறேன்.

*Co-operative Building Societies*

*163 *Q.*—SRI N. R. THIAGARAJAN : கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

கூட்டுறவுக் கட்டிடச் சங்கங்களின் கடன் மனுக்களை ஜில்லா டிபுடி ரிஜிஸ்ட்ரார்களே சாங்க்ஷன் செய்யும்படி பவர் கொடுக்க உத்தேசமுண்டா ?

THE HON. SRI R. VENKATARAMAN : No, Sir.

*Rural Housing Programme*

*169 *Q.*—SRI M. JAGANNATHAN : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) whether any communication has been received from the Ministry of Community Development, Government of India, regarding the selection of villages for the execution of rural housing programme in the State; and

(*b*) if so, the action taken thereon?